ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**15 | T | I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2022(2023)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2022(2023)
**General Certificate of Education (Ord. Level) Examination, 2022(2023)**

ක්‍රිස්තියානි ධර්මය I, II
**கிறிஸ்தவம் I, II**
Christianity I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவு செய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

## கிறிஸ்தவம் I

**அறிவுறுத்தல்கள் :**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
* **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (X) இடுக.**
* அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.

**1.** இயேசுவானவர் பெத்லகேமில் பிறந்தமைக்கான காரணம்,
(1) கபிரியேல் தேவதூதன் மரியாவிற்கும் யோசப்பிற்கும் கொடுத்த அறிவுரையாகும்.
(2) பெத்லகேமில் குடிசன மதிப்பீடு இடம்பெற்றமையாகும்.
(3) சக்கரியா கண்ட இறைக்காட்சியாகும்.
(4) இறைவாக்கினரைப் பின்பற்றி எடுக்கப்பட்ட முடிவாகும்.

**2.** "காரிருளில் நடந்துவந்த மக்கள் பேரொளியைக் கண்டார்கள்." இவ்வாறு உரைத்த இறைவாக்கினர் யார்?
(1) எலியா (2) மலாக்கி (3) மீக்கா (4) எசாயா

**3.** மெசியாவின் வருகையை முன்னறிவிப்பதற்கு கடவுள் இறைவாக்கினரை உபயோகித்தார். இதன் மூலம் இன்று இறைபணி தொடர்பாகப் பெறப்படும் செய்தி என்ன?
(1) திருச்சபைக்குள் மக்களைச் சேர்ப்பதற்கான வழிமுறைகள்
(2) நம்பிக்கையின் செய்தியை அறிவித்தல்
(3) இயற்கைக்கு மேலான செயல்களை எதிர்பார்த்தல்
(4) இறைவாக்கு உரைக்கும் நூல்களிலிருந்து மட்டும் வழிநடத்துதலைப் பெற்றுக்கொள்ளல்

**4.** "என் ஆண்டவரின் தாய் என்னிடம் வர நான் யார்?" இவ்வாறு கூறி எலிசபெத்து மரியாவை வரவேற்பதற்கான காரணம் யாது?
(1) உறவினர் என்பதாகும். (2) மரபாகும்.
(3) சமுதாய பிரபலம் என்பதாகும். (4) தூய ஆவியரின் வழிநடத்துதலாகும்.

**5.** 'இயேசு' என்ற பெயரின் கருத்தாவது
(1) ஆண்டவர் மீட்பராயிருக்கிறார் (2) அபிசேகம் பெற்றவர்
(3) இறைவனுக்குரியவர் (4) யெகோ யீரே

**6.** மெசியாவின் பிறப்பைப்பற்றிய இறைவாக்குகள் மக்களுடன் கிட்டிய தொடர்புடையவையாக இருந்தமைக்கான காரணம் அது,
(1) சமாதானமிகு காலமாய் இருந்தமையாகும்.
(2) அரசியல் பொருளாதார நெருக்கடிகளின் காலமாய் இருந்தமையாகும்.
(3) இயேசுவின் கால அரசர் பற்றியமையாகும்.
(4) அந்நிய ஆட்சியின் ஆரம்பம் என்பதாலாகும்.

[பக். 2 ஐப் பார்க்க

**7.** இயேசுவானவரின் கற்பித்தல்களின்படி பொருளாதார நெருக்கடிமிக்க காலத்தில் நாம் எவ்வாறு செயற்பட வேண்டும்?
(1) முதலில் எமது தேவைகளை நிறைவு செய்துகொள்ள வேண்டும்.
(2) பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கென வன்முறைகளில் ஈடுபட வேண்டும்.
(3) ஒன்றும் செய்யாது அமைதியாக இருக்க வேண்டும்.
(4) நீதியோடும், அன்போடும் பொறுமையாகச் செயற்பட வேண்டும்.

**8.** திருமுழுக்கு யோவானின் போதனைகளிலிருந்து நாம் பெற்றுக்கொள்ளும் அறிவுரைகளாவன,
(1) தொடர்ந்து அதிகாரத்திலிருப்பதற்கென தனது பதவியை உபயோகித்தல் என்பதாகும்.
(2) தனது உடைமைகள் அனைத்தையும் ஏழைகளுக்கு வழங்குதல் என்பதாகும்.
(3) மனந்திரும்பி பாவத்தைவிட்டு விலகுதல் என்பதாகும்.
(4) தனது தற்போதைய வாழ்க்கை நிலைபற்றி திருப்தி கொள்வதாகும்.

**9.** இன்றைய சூழலில் கிறிஸ்தவராகிய எமது முதற் செயற்பாடாவது யாது?
(1) இறையரசை அறிவித்தலாகும்.
(2) இயேசுவானவரின் இரண்டாம் வருகை பற்றி அறிவித்தலாகும்.
(3) சமுதாய சேவையில் மட்டும் ஈடுபடுதலாகும்.
(4) பிறரை கிறிஸ்தவ சமயத்தில் ஈடுபாடு கொள்ளச் செய்வதாகும்.

**10.** பழைய ஏற்பாட்டில் 'நெருப்பு' எதனை அடையாளப்படுத்தியது?
(1) கடவுள் அங்கு இல்லை என்பதனையாகும்.
(2) கடவுள் அங்கு இருக்கிறார் என்பதனையாகும்.
(3) கடவுள் இரக்கம் நிறைந்தவர் என்பதனையாகும்.
(4) கடவுள் குணமளிக்கிறார் என்பதனையாகும்.

**11.** பழைய ஏற்பாட்டில் அபிசேகம் பெற்றவர்களாகக் கருதப்பட்டவர்கள், முறையே
(1) குருக்கள், அரசர்கள், மேய்ப்பர்கள்
(2) குருக்கள், இறைவாக்கினர், அரசர்கள்
(3) அரசர்கள், இறைவாக்கினர், மேய்ப்பர்கள்
(4) அரசர்கள், குருக்கள், மேய்ப்பர்கள்

**12.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - அவர்கள் சமய அதிகாரிகளுக்குப் பயந்திருந்தமை
B - அவர்கள் இயேசுவானவரை பிலாத்துவிடம் கொண்டு சென்றமை
C - அவர்கள் உரோமரை எதிர்த்தமை
D - அவர்கள் எருசேலமை தமது வழிபாட்டுத்தலமாகக் கொண்டிருந்தமை
மேற் கூறப்பட்டுள்ள கூற்றுகளில், யூத மக்கள் அந்நிய தேசத்தவரால் ஆளப்பட்டனர் என்பதனை வெளிக்கொணரும் கூற்றுகள் எவை?
(1) A யும் B யும் (2) A யும் C யும் (3) B யும் C யும் (4) B யும் D யும்

**13.** இறையரசில் அதிமுக்கியமான விழுமியமாவது,
(1) அதிகாரம்
(2) அன்பும் நீதியும்
(3) யூத சட்டங்களைப் பின்பற்றுதல்
(4) மக்களை ஒன்றுசேர்த்தல்

**14.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - என்னைப் பின்பற்றி வா!
B - கலப்பையில் கைவைத்த பின்னர் திரும்பிப் பார்க்காதீர்கள்
C - இப்போதிருந்து நீங்கள் மக்களைப் பிடிப்பவர் ஆவீர்கள்
D - மரித்தவர்களை மரித்தவர்களே அடக்கம் செய்யட்டும்
மேற்குறித்த கூற்றுகளில் இயேசுவானவர் 12 திருத்தூதரை அழைத்த வேளையில் கூறியவற்றை சரியாக எடுத்துக் காட்டுவது,
(1) A யும் B யும் (2) A யும் C யும் (3) B யும் C யும் (4) B யும் D யும்

**15.** இறையரசின் வளர்ச்சி பற்றிய கடுகுவிதை உவமை, புளிப்புமாவு பற்றிய உவமை என்பவற்றிலிருந்து நாம் பெற்றுக்கொள்ளும் செய்தியாவது,
(1) எமது சுயமுயற்சியினாலேயே நாம் வளர்ச்சி பெறுகிறோம்.
(2) இறை வல்லமை எமது தலைமைத்துவத்தின் மூலமே செயற்படுகின்றது.
(3) வளர்ச்சியடைவதற்கென சிறிதளவில் ஆரம்பித்து, இறைவல்லமையுடன் அதிகரித்தல்.
(4) உணவு தயாரிக்கும்போது புளிப்புமாவை உபயோகித்தலின் மூலம் எதிர்பாராத வளர்ச்சியை அனுபவித்தல்

[பக். 3 ஐப் பார்க்க

**16.** இயேசுவானவர் செய்த இறையரசின் அற்புதங்கள் அல்லது அடையாளங்களின் மூலம் நாம் அறிந்துகொள்வது,
(1) சுகம் பெறுவதற்கு அற்புதங்கள் தேவைப்படுகின்றன.
(2) இறைவல்லமையின் முன் வேறு வல்லமைகள் பலனற்றவையாகின்றன.
(3) அற்புதங்களின்மீது மட்டுமே நாம் நம்பிக்கை கொள்ள வேண்டும்.
(4) மக்களை ஒன்றுகூட்டிச் சேர்ப்பதற்காக மட்டுமே இயேசுவானவர் அற்புதங்களைச் செய்தார்.

**17.** "உன் ஆண்டவராகிய கடவுளை வணங்கி அவர் ஒருவருக்கே பணிசெய்வாயாக" என்று பத்துக் கற்பனைகளில் கூறப்பட்டுள்ளதை, இயேசுவானவர் எதிர்கொண்ட எந்த சோதனைக்கு மாறுத்தரமாக உபயோகித்தார்?
(1) முதலாம் சோதனை (2) இரண்டாவது சோதனை
(3) மூன்றாவது சோதனைகள் (4) மூன்று சோதனைகளும்

**18.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - சரியான தரிசனத்தை முன்வைத்தல்
B - மோசேயையும் எலியாவையும் காண்பதன் முக்கியத்துவம்
C - மலைமீது மூன்று கூடாரங்கள் அமைத்தல்
D - இயேசுவானவரின் இறைத்தன்மை வெளிப்படுதல்
மேற்குறித்த கூற்றுகளில் இயேசுவின் தோற்றம் மாறுதல் மூலமாக, கிறிஸ்தவர்களாகிய நாம் இன்று பெற்றுக்கொள்ளும் செய்திகள் யாவை?
(1) A யும் B யும் (2) A யும் C யும் (3) A யும் D யும் (4) C யும் D யும்

**19.** இயேசுவானவர் சிலுவையில் அறையப்படுவதற்கு முன்னர் தமது சீடர்களுடன் கொண்டாடியது,
(1) கூடாரப் பண்டிகை
(2) அரச மகிமையுடன் எருசலேமிற்குள் பிரவேசித்தல்
(3) பஸ்கா பண்டிகை
(4) தேவாலயத்தைத் தூய்மைப்படுத்தல்

**20.** இயேசுவானவரின் போதனையின்படி, ஆண் பெண் என்போரை நாம் நோக்க வேண்டியது,
(1) வெவ்வேறுபட்ட நோக்குடன் (2) சமமானவர்களாக
(3) அவரின் ஆளுமைக்கேற்றபடி (4) சந்தர்ப்பத்திற்கேற்றபடி

**21.** உங்களுக்குத் தீமை செய்த ஒரு மாணவர் / மாணவி பற்றி உங்களின் பிரதிச் செயலாக அமைய வேண்டியது,
(1) அதிபரிடம் அறிவித்தலாகும்.
(2) நீங்களே அந்த மாணவருக்குத் தண்டணையளித்தலாகும்.
(3) நட்புடனும் அன்புடனும் செயற்படுதலாகும்.
(4) பெற்றோருக்கு அறிவித்தலாகும்.

**22.** பின்வரும் கூற்றுக்களைக் கருதுக,
A - நீதியும் நியாயமும்
B - தீர்ப்பும் தண்டனையும்
C - எதிர்பார்ப்பும் மகிழ்ச்சியும்
D - நல்லாட்சியும் பொறுப்புக் கூறலும்
நிரந்தர சமாதானம் மேற்கூறப்பட்டுள்ள எக்காரணங்களின்மீது அமைய வேண்டும்?
(1) A யும் C யும் (2) A யும் D யும் (3) B யும் C யும் (4) B யும் D யும்

**23.** கீழ்க்காணும் குழுக்களை நோக்கவும்
A - சினகோக் / சிற்றாலயத் தலைவர்கள்
B - ஏழையின் உள்ளத்தோர்
C - சிறுபிள்ளைகளைப் போன்றோர்
D - சட்டங்களைக் கைக்கொள்வோர்
மேற்காணும் குழுக்களில் இறையரசைப் பெறக்கூடிய இரு குழுவினர் யாவர்?
(1) A யும் B யும் (2) A யும் C யும் (3) A யும் D யும் (4) B யும் C யும்

**24.** யூத தலைவர்கள் இயேசுவானவரை நியாயம் தீர்க்கப்படும்படியாகச் செய்தமைக்கான காரணமாவது,
(1) இயேசு தாம் இறைவன் என்று கூறியமை
(2) ஒடுக்கப்பட்டவர்களுகாகச் செயல்பட்டமை
(3) கலிலேயாவிலிருந்து வந்தமை
(4) தேவாலயத்தைச் சுததிகரித்தமை

[பக். 4 ஐப் பார்க்க

**25.** நியாயத் தீர்ப்புச் செய்யப்படும்படியாக இயேசுவானவர் சந்திக்கவேண்டி ஏற்பட்ட யூத நிறுவனமும் தனிநபர்களும்
(1) சனகரின் சங்கம், பிலாத்து, ஏரோது
(2) யூத தலைமைச் சங்கம், தலைமைக் குரு, ஏரோது
(3) யூத தலைமைச் சங்கம், பிலாத்து, ஏரோது
(4) தலைமைக் குரு, ஏரோது, பிலாத்து

**26.** "ஆண்டவரே உம்மொடு சிறையிடப்படுவதற்கும் ஏன் சாவதற்கும் நான் ஆயத்தமாய் உள்ளேன்" இவ்வாறு கூறியவர்,
(1) பவுல் (2) யூதாசு இஸ்காரியோத்து
(3) பேதுரு (4) தோமா

**27.** யாரையும் நாம் நியாயம் தீர்க்காமல் இருப்பதற்கான காரணம்,
(1) நாம் யாவரும் பாவிகளாயுள்ளோம் என்பதாலாகும்.
(2) நாம் ஒருவருக்கொருவர் மன்னிப்பு வழங்க வேண்டியுள்ளதாலாகும்.
(3) இறுதி தீர்ப்பு வழங்குபவர் கடவுள் என்பதாலாகும்.
(4) நீதி மன்றமே தீர்ப்பு வழங்கவேண்டும் என்பதாலாகும்.

**28.** துன்பங்களின் மத்தியிலும் கிறிஸ்தவர்கள் விசுவாசத்துடன் செயற்படுவதற்கான காரணம்,
(1) நிறைவான வாழ்வைப் பெறுவதற்கு இயேசுவில் வைத்திருக்கும் நம்பிக்கையாகும்.
(2) சவால்களை தனது பலத்தின் மூலமாகவே மேற்கொள்வதற்கு நம்பியிருத்தலாகும்.
(3) மாற்றங்களைக் கொண்டுவருவதற்கு சமுதாயத்தின் மேல் நம்பிக்கை வைத்தலாகும்.
(4) தேவைகள் ஏற்படும்போது அவற்றை திருச்சபை நிறைவுசெய்யயும் என்ற நம்பிக்கையாகும்.

**29.** 'பெந்தக்கோஸ்து' தின நிகழ்வுகளின் மூலம் நாம் பெற்றுக்கொள்ளும் போதனையாவது,
(1) ஆவியானவர் தெரிந்து கொள்ளப்பட்ட சிலருக்கே வழங்கப்படுகிறார்.
(2) அனைத்து தடைகள், பிரிவுகள் என்பவற்றைக் கடந்து தூய ஆவியானவர் செயற்படுகிறார்.
(3) இயற்கைக்கு மேலான செயல்களுடன் மட்டுமே ஆவியானவர் தொடர்புபட்டுள்ளார்.
(4) தூய ஆவியானவர் வெவ்வேறு மொழிகளில் பேசுபவர் என்ற சிந்தனை

**30.** ஆரம்பத்தில் கிறிஸ்தவர்களைத் துன்புறுத்திய பவுல், பின்பு கிறிஸ்துவிற்காகப் பாடுகளை அனுபவிக்க முன்வந்தமைக்கான காரணம் யாது?
(1) யூத சமயத்தைப்பற்றிய ஆழ்ந்த அறிவு பெற்றமையாகும்.
(2) பிறயினத்தவர்மீது கொண்ட அன்பினாலாகும்.
(3) உயிர்த்தெழுந்த இயேசுவை சந்தித்தமையாலாகும்.
(4) அனனியாவின் மூலம் பார்வை பெற்றமையாகும்.

**31.** பல்லின, பற்சமய சமுதாயத்தில் வசிக்கும் ஒரு கிறிஸ்தவன், பவுலின் திருத்தூதுரைப் பயணத்திலிருந்து கற்றுக்கொள்வது,
(1) புத்தியோடும் உணர்வோடும் செயற்பட வேண்டும்.
(2) எச்சந்தர்ப்பத்திலும் அச்சமின்றி பேச வேண்டும்.
(3) அனைவரையும் மகிழ்விக்க வேண்டுமென்பதற்காக கிறிஸ்தவ அடிப்படை நெறிகளை உதாசீனப்படுத்தல் வேண்டும்.
(4) அரசியல் ஈடுபாடு மற்றும் பாதுகாவல் பெற வேண்டும்.

**32.** உமது கிறிஸ்தவத் திருப்பணியின்போது வெவவேறு கருத்துக்களை நோக்க வேண்டியிருக்கும் வேளையில், உமது பிரதிச் செயலாய் அமைய வேண்டியது எது?
(1) தனது சுய கருத்தை நிலைநாட்டுவதற்கென தீவிரமாகச் செயற்படுதலாகும்.
(2) பணியைப்பற்றி சோர்ந்து பின்வாங்குதலாகும்.
(3) பணிவுடன் உங்கள் கருத்தை விட்டுக்கொடுத்தலாகும்.
(4) பணியானது பாதிப்படையாவண்ணம் அக்கருத்தை புத்தியோடு செயற்படுத்தலாகும்.

**33.** தரப்பட்டுள்ள வசனங்களில், இறை சித்தத்திற்கு முதலிடம் கொடுப்பது எது?
(1) "என் விருப்பப்படியல்ல ; உம் விருப்பப்படியே நிகழட்டும்."
(2) "சோதனைக்கு உட்படாதிருக்க விழித்திருந்து இறைவனிடம் வேண்டுங்கள்."
(3) "என் இல்லம் இறைவேண்டலின் வீடு"
(4) "உங்கள் விசுவாசம் தளராதிருக்கும்படி நான் வேண்டுதல் செய்கிறேன்"

[பக். 5 ஐப் பார்க்க

**34.** கீழ்க்காணும் கூற்றுகளில், எம்மாவூருக்குப் பயணம் செய்த இரு சீடர்கள் கூறியது எது?
(1) "அவர் உயிருடன் எழுப்பப்பட்டார்"
(2) "உயிரோடு இருப்பவரை கல்லறையில் தேடுவது ஏன்?"
(3) "ஏன் உள்ளத்தில் ஐயம் கொள்ளுகிறீர்கள்?"
(4) "ஆண்டவர் உண்மையாகவே உயிருடன் எழுப்பப்பட்டார்."

**35.** எருசேலம் மகாநாட்டின்போது, பேதுருவும் யாக்கோபுவும் பிற இனத்தவரின் விருத்தசேதனம் பற்றி எடுத்த தீர்மானம்
(1) அனைவரும் விருத்தசேதனம் பற்றிய ஒழுங்கைப் பின்பற்ற வேண்டும்.
(2) விருத்தசேதனம் பெறுதல் பற்றிய தீர்மானம் ஒருவரின் தனிப்பட்ட விடயமாகும்.
(3) யூதர்கள் மட்டுமே விருத்தசேதனம் பற்றிய ஒழுங்கைப் பின்பற்ற வேண்டும்.
(4) எவரும் விருத்தசேதனம் பற்றிய ஒழுங்கைப் பின்பற்ற வேண்டியதில்லை.

**36.** உமது ஆலயத்தில் ஏற்பட்டுள்ள பிரிவினையை எவ்வாறு தீர்த்து வைப்பீர்?
(1) பிரிந்திருக்கும் குழுக்களுக்கு சுயவுரிமை அளித்தல்
(2) நிதானமாகச் செவிகொடுத்து யாவரையும் ஒன்றுபடுத்தக்கூடிய தீர்வை எடுத்தல்
(3) பிரச்சினைக்குத் தீர்வு காண்பதற்கு நீதி மன்றத்தை அணுகுதல்
(4) அனைத்துக் குழுக்களும் தமது சொந்தத் தீர்வை எடுக்க இடமளித்தல்

**37.** பின்வரும் சவால்களைக் கருதுக.
A - குற்றமற்றோராய் இருப்பினும், குற்றவாளியாகக் கருதப்பட்டு சிறைவாசம் அனுபவித்தல்
B - திருச்சபையில் உயர்பதவி வழங்கப்படுதல்
C - சமுதாயத்தில் உயர்ந்த மதிப்பு ஏற்படுதல்
D - சமுதாயத்தினால் ஒதுக்கிவிடப்படுதல்
மேற்குறிப்பிட்டவற்றில் இயேசுவானவரைப் பின்பற்றிச் செயற்படும்போது, நாம் எதிர்கொள்ளக்கூடிய சவால்கள் யாவை?
(1) A யும் B யும் (2) A யும் C யும் (3) A யும் D யும் (4) B யும் C யும்

**38.** அருட்தந்தை திஸ்ஸ பாலசூரியவின் பணியுடன் நேரடித் தொடர்புள்ள வசனமாவது,
(1) சமாதானத்தை அறிவித்து பிணியாளர்களைக் குணப்படுத்தல்
(2) ஏழைகளை விடுவித்து பிணியாளர்களைக் குணப்படுத்தல்
(3) ஏழைகளை விடுவித்து குருடருக்குப் பார்வையளித்தல்
(4) ஏழைகளுக்கு சமாதானத்தையும் நற்செய்தியையும் அறிவித்தல்

**39.** விசுவாசிகள் மத்தியில் பரவிவந்த பிழையான கருத்துக்களை பவுல் எவ்வாறு அணுகினார்?
(1) திருமுகங்கள் என்னும் நிருபங்கள் மூலம் அறிவை வளர்த்தல்
(2) எதிர்ப்புக் காட்டியவர்களை வெளியேற்றல்
(3) எழுந்த கருத்துக்களை தாமே தீர்த்துக்கொள்ள இடமளித்தல்
(4) கீழ்மட்ட தலைவர்கள் கருத்துக்களைத் தாமே தீர்த்துக்கொள்ள இடமளித்தல்

**40.** ஆரம்பகால திருச்சபையினர் தமது உடமைகள் அனைத்தையும் பொதுவாகக்கொண்டு அனுபவித்தமை பற்றிய உமது கருத்தாவது,
(1) ஒரு பொருளும் தனிச்சொத்தாக இருக்கக்கூடாது.
(2) விசுவாசிகள் தமது சொத்துக்களைத் திருச்சபைக்குக் கொடுக்க வேண்டும்.
(3) விசுவாசிகள் ஏனையோருடன் பகிர்ந்து வாழ வேண்டும்.
(4) பெத்லகேமில் மக்கள் வாழ்ந்த முறையைப் பின்பற்ற வேண்டும்.

* *

[பக். 6 ஐப் பார்க்க

**15 T I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2022(2023)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2022(2023)
General Certificate of Education (Ord. Level) Examination, 2022(2023)

| | |
|---|---|
| ක්‍රිස්තියානි ධර්මය | I, II |
| **கிறிஸ்தவம்** | **I, II** |
| Christianity | I, II |

## கிறிஸ்தவம் II

* **முதலாம்** வினாவிற்கும் மேலும் **நான்கு** வினாக்களுக்குமாக மொத்தம் **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.
* முதலாம் வினாவின் விடைக்கு **20** புள்ளிகளும் ஏனைய ஒவ்வொரு வினாவின் விடைக்கும் **10** புள்ளிகள் வீதமும் வழங்கப்படும்.

**1.** (i) (அ) கடவுள் எதிலிருந்து மனிதனை உருவாக்கினார்?

(ஆ) அவனுக்கு உயிரளிப்பதற்கென கடவுள் என்ன செய்தார்?

(ii) "உன் நாட்டிலிருந்தும் உன் இனத்தவரிடமிருந்தும் உன் தந்தை வீட்டிலிருந்தும் புறப்பட்டு, நான் உனக்குக் காண்பிக்கும் நாட்டிற்குச் செல்."

(அ) இவ்வாறு யாரிடம் கூறப்பட்டது?

(ஆ) அவ்வாறு சென்றவரின் எப் பண்பு தெளிவாகக் காட்டப்பட்டுள்ளது?

(iii) இயேசுவானவர் கற்பித்த ஆண்டவரின் செபத்தில் பாவமன்னிப்புப் பற்றி காணப்படும் முக்கிய விடயங்கள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(iv) மெசியாவின் வருகையைப் பற்றி எதிர்வுகூறிய இறைவாக்கினர் **இருவரின்** பெயர்களைக் கூறுக.

(v) (அ) 'இம்மானுவேல்' என்ற பெயர் எந்த மொழியிலிருந்து தோன்றியது?

(ஆ) இதன் கருத்து யாது?

(vi) யூத மதக் குழுவினர் மத்தியில் உயிர்த்தெழுதலை ஏற்றுக்கொள்ளாத **ஒரு** குழுவினதும், உயிர்த்தெழுதலை ஏற்றுக்கொள்ளும் **ஒரு** குழுவினதும் பெயர்களைத் தருக.

(vii) (அ) இரவு நேரத்தில் இயேசுவானவரைக் காண்பதற்கு வந்த சமயத் தலைவரின் பெயர் என்ன?

(ஆ) அவர் எந்த யூதக் குழுவினரைச் சேர்ந்தவர்?

(viii) (அ) யோவான் 4 ஆம் அதிகாரத்தில் தேசிய மற்றும் இனவேறுபாடுகளைத் தாண்டி இயேசுவானவர் செயற்பட்ட நிகழ்வு குறிப்பிடப்படுகிறது. இயேசுவானவர் இச்சந்தர்ப்பத்தில் பெற்றுக்கொள்ள விரும்பியதென்ன?

(ஆ) அவருக்குக் கிடைத்த முதல் பதில் என்ன?

(ix) யோவான் 4 ஆம் அதிகாரத்தில் இயேசு எதிர் கொண்ட பாலியல் மற்றும் இன வேறுபாடுகள் யாவை?

(x) நாம் இயேசுவானவரின் மூலமாக நித்திய வாழ்வைப் பெறுகின்றோம். நாம் பெற்றுக்கொண்ட புது நிலை வாழ்வில் காணப்படவேண்டிய **இரு** முக்கிய பண்புகள் யாவை?

**2.** (i) இறையரசின் கொள்கைகளைப் பற்றி இயேசுவானர் கூறிய **இரண்டு** உவமைக் கதைகள் யாவை?

(ii) நாம் இவ் உவமைக் கதைகளிலிருந்து பெறும் **மூன்று** கற்பித்தல்கள் யாவை?

(iii) இன்றைய கிறிஸ்தவர்கள் உலகில் வெவ்வேறு மக்களுடன் தொடர்பினைப் பேணும்போது, எவ்வாறு செயற்பட வேண்டும் என இறையரசின் கொள்கைகள் **ஐந்தின்** ஊடாக விளக்குக.

[பக். 7 ஐப் பார்க்க

3. (i) லூக்கா நற்செய்தியில் கூறப்பட்டுள்ளபடி, இயேசுவானவர் கெனேசரேத்து கடலருகில் அழைத்த **இரு** சீடர்களைப் பெயரிடுக.

(ii) இயேசுவானவர் பன்னிரு சீடர்களை அழைத்த வேளையில், அவர்களில் **மூவர்** என்ன தொழிலில் ஈடுபட்டிருந்தனர் எனக் குறிப்பிடுக.

(iii) 'அப்போஸ்தலர்' என்பதன் கருத்தைக் கூறி, இன்றைய சமுதாயத்தில் அதன் முக்கியத்துவத்தை **நான்கு** காரணங்களுக்கூடாக விளக்குக.

4. (i) சமவெளிப் பொழிவில் இயேசுவானவர் முன்வைக்கும் எதிர்மாறான **இரண்டு** வாழ்க்கை முறைகள் யாவை?

(ii) கிறிஸ்தவர்கள் என்ற முறையில் நாம் அப்போதனைகளின்படி வாழ வேண்டிய **மூன்று** தருணங்களை முன்வைக்க.

(iii) இன்றைய இலங்கையில் வாழும் கிறிஸ்தவர் என்ற வகையில், திருமறை வாசித்தல் மற்றும் சமவெளிப் பொழிவு என்பவற்றின் மூலம் எமது வாழ்வை மாற்றி அமைத்துக் கொள்வதற்கு உதவும் வழிமுறைகள் **ஐந்தை** முன்வைக்கவும்.

5. (i) எமது நாளாந்த வாழ்விற்கு உதவும் இயேசுவானவரின் **இரண்டு** கற்பித்தல்களை முன்வைக்க.

(ii) இயேசுவானவரின் போதனைகளின்படி நாம் வாழ்வை சரியாக அமைத்துக் கொள்ள வேண்டியது ஏன் என்பதனைக்கூறி, அதிலிருந்து நாம் பெறும் பலன்கள் **மூன்றைக்** கூறுக.

(iii) மாற்று வாழ்க்கை முறையை மேற்கொள்வதற்கென, கிறிஸ்தவரான எம்மால் தலைமைத்துவம் வழங்கக்கூடிய **ஐந்து** பகுதிகளைக் கூறி விளக்க.

6. (i) 
- பவுலின் முதலாவது திருத்தூதுப் பயணத்தை எந்த நகரத்திலிருந்து ஆரம்பித்தார்?
- பயணத்தை ஆரம்பிக்குமுன் அந்நகரத்தார் செய்தது என்ன?

(ii) பவுல் இரண்டாம் திருத்தூதுப் பணியின்போது சென்ற **மூன்று** இடங்களைக் குறிப்பிட்டு, அவரோடு பிரயாணத்தில் சென்ற அல்லது அவர்களுக்கு உதவிய **மூவரின்** பெயர்களைக் குறிப்பிடவும்.

(iii) பவுலின் இப்பிரயாணத்தின் போது வெவ்வேறு நபர்களையும் தருணங்களையும் எதிர்நோக்க வேண்டியிருந்தது.

கீழ்க்குறிப்பிட்டுள்ளவர்களில் ஒரு நபரைத் தெரிவு செய்து, அந்நபரை எதிர் கொண்ட சந்தர்ப்பத்தில் பவுல் செயல்பட்ட முறையிலிருந்து, இன்று இலங்கையில் திருத்தூதுப் பணிசெய்வோர் நற்செய்தியைக் கூறும்போது கைக்கொள்ளக் கூடிய வழிமுறைகள் யாவை என விளக்கிக் கூறவும்.

(அ) எலிமா

(ஆ) பொறாமை கொண்ட யூதர்

(இ) அடிமைப்பெண் ஒருவரை வைத்திருந்தவர்கள்

(ஈ) எப்பிக்கூரர், ஸ்தோயிக்கர் ஆகிய மெய்யியல் அறிஞர்கள்

7. பின்வரும் தலைப்புகளில் எவையேனும் **இரண்டினைத்** தெரிவுசெய்து, சிறுகுறிப்பெழுதுக. அவற்றிற்கென தரப்பட்டுள்ள வழிகாட்டற் குறிப்புகளை அடிப்படையாகக் கொள்க.

(i) முற்தூதுவர்
- முற்தூதுவர் என குறிப்பிடப்படுபவரும் அவரது செயற்பாடுகளும்
- அவர் தமது வாழ்நாளை அதிகமாகக் கழித்த சூழல்
- அவர் கூறியதைக் கேட்பதற்கு வந்தவர்களும் அவர்களுக்கு கொடுக்கப்பட்ட எச்சரிக்கைகளும்
- அங்கு வந்த மக்களின் கவனம் யார்மீது திருப்பப்பட்டிருந்தது
- அவரின் வாழ்வும் போதனைகளும் எவ்வாறு எங்களுக்கு முக்கியமாகின்றது.

(ii) யூத பாரம்பரியங்கள்
- இயேசுவானவரின் காலத்திலிருந்த யூத வழக்கங்கள்
- இயேசுவானவரின் பெற்றோர் அவரின் குழந்தைப் பருவத்திலும், பின்னர் 12 வயதிலும் மேற்கொண்ட பாரம்பரியச் சடங்கு முறைகள்
- குழந்தை இயேசுவை தேவாலயத்திற்கு கொண்டு சென்றபொழுது அங்கிருந்த இருவர்
- அவர்கள் இயேசு, மரியா என்போருக்கு கூறிய வெளிப்படுத்தல்கள்
- 12 வயதில் யூத தலைவர்களுடன் இயேசுவானவர் உரையாடிக் கொண்டிருக்கும் வேளையில் அவர் தமது பெற்றோருக்குக் காட்டிய பிரதி நடத்தை இன்று எமக்கு முக்கியமாகும் முறை

(iii) வானதூதரின் பணி
- பணிகளைப் பெற்றுக்கொண்ட தனிநபர்களும் குழுக்களும்
- செய்த பணிகளும் அவற்றோடு தொடர்புபட்ட நிகழ்வுகளும்
- முன்வைத்த செய்திகள்
- வானதூதரின் பணியைப்பெற்றுக் கொண்டவர்களின் பிரதிநடத்தை
- இன்று வானதூதரென நாம் எண்ணும் மக்களும் அவர்களின் தூதுவப் பணிகளும்

(iv) நாசரேத்து செபாலய பிரசங்கம்
- நாசரேத்து ஆலய பிரசங்கத்தின் முக்கியத்துவம்
- பிரசங்கத்தில் குறிப்பிடப்பட்ட குழுக்களின் பிரதிச்செயல்
- பழைய ஏற்பாட்டுக் காலத்தில் வாழ்ந்த இருவரின் பெயர்களை முன்வைத்ததன் மூலம் கேட்டுக் கொண்டிருந்த மக்களுக்கு கொடுத்த செய்தி
- செபாலயத்தில் போதனையைக் கேட்டுக் கொண்டிருந்த மக்களின் பிரதிச் செயல்
- இப் பிரசங்கத்தின் மூலம், இன்றைய சமுதாயத்தில் சேவையாற்றப்பட வேண்டிய மக்கள் குழுக்கள்.

* * *

